It is proposed to set up during the current year a Sales-*cum*-Procurement Depot at Coimbatore to provide marketing facilities for handicrafts goods.

*Sathiamangalam-Chamrajnagar Railway Line.*

* 282 *Q*.—Sri P. G. MANICKAM : கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

மத்திய கவர்ன்மெண்டாருடைய 1957–58–ம் வருஷத்திய சர்வே திட்டத்தில் சேர்க்கப்பட்டிருந்த சத்தியமங்கலம்-சாம்ராஜ்நகர் புது ரயில்வே லைன் சர்வே எடுக்கப்பட்டாகிவிட்டதா ?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : As this railway line has not been included by the Government of India in the Second Five-Year Plan, the survey of the line has not been taken up.

Sri P. G. MANICKAM : இதற்கு முன்பு ஒரு தடவை இதே லைன் சர்வே செய்யப்பட்டிருக்கிறது. மறுபடியும் 1957–58-ல் சர்வே செய்யப்படும் என்று தெரிவிக்கப்பட்டிருக்கிறது என்பது எனது ஞாபகத்தில் இருக்கிறது. பழங்காலம் முதற்கொண்டே இதைப்பற்றி சர்வே செய்யப்பட்டு வருகிறது. இது சுமார் பத்து அல்லது இருபது வருஷங்களாகவே பரிசீலனையில் இருந்து வருகிறது. கவர்னர் அவர்கள் அங்கு வந்தபோது கூட இதைப்பற்றி அவரிடம் தெரிவிக்கப்பட்டது. அப்பொழுது அவர்கூட இதை எடுத்துக்கொள்வதற்கு பிரயாசை எடுத்துக்கொள்ளப்படும் என்றும் தெரிவித்திருக்கிறார். ஆகவே இந்த திட்டத்தை உடனடியாக எடுத்து அதற்கு வேண்டிய நடவடிக்கைகளையும் எடுத்துக்கொள்ளும்படி நம்முடைய சர்க்கார் மத்திய சர்க்காருக்கு சிபாரிசு செய்யுமா என்பதை அறிய விரும்புகிறேன்.

The Hon. Sri M. BHAKTAVATSALAM : சர்வே எடுப்பது என்பது பெரிய விஷயம் அல்ல. முன்பு இதைப்பற்றி சர்வே செய்யப்பட்டிருந்தாலும் மேற்கொண்டு சர்வே செய்யும்படியாகவும் இருக்கிறது. அதை விட முக்கியமான திட்டங்கள் இப்பொழுது அரசாங்கத்தினிடம் இருக்கின்றன. அவைகளைப்பற்றி இந்த அரசாங்கம் வற்புறுத்திக்கொண்டிருக்கிறது. இதற்கு பத்தாவது இடம் கொடுக்கப்பட்டிருக்கிறது. இது இப்பொழுது எடுத்துக்கொள்ளப்படும் என்பதை எதிர் பார்ப்பதற்கு இல்லை.

*Key Village Centres.*

* 283 *Q*.—Sri A. VEDARATHNAM : கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) 11–7–57 அன்று 86-ம் நெம்பர் கேள்விக்கு அளித்த பதிலின் படி இப்போது ஆரம்பித்திருக்கும் கேந்திர கிராமத் திட்டம் எந்தெந்த இடத்தில் இருக்கின்றது என்ற விபரத்தை தெரிவிக்கும் அறிக்கை சபையின் முன்னிலையில் வைக்கப்படுமா ?

(ஆ) மேற்படி திட்டம் ஏற்படுத்தவேண்டுமென்று கோரி ஏதேனும் விண்ணப்பங்கள் வந்திருக்கின்றனவா ?

(இ) அப்படியானால், அவற்றின் பேரில் என்ன முடிவு செய்திருக்கிறது ?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : (*a*) A statement[a] is placed on the table of the House.

(*b*) & (*c*) Yes. During 1957–58, three petitions were received by Government. The requests contained therein were examined and suitable replies were given to the petitioners.

---

[a] Printed as Appendix I on pages 218–220 infra.